*Fancy Leather Goods Manufacturing Unit, Pallavaram*

* 200 *Q.*—SRI P. G. MANIKKAM : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா :—

(அ) செங்கற்பட்டு ஜில்லா பல்லாவரத்தில் இருக்கும் Fancy Leather Goods Manufacturing Unit-லிருந்து என்னென்ன விதமான Fancy Leather goods சாமான்கள் தயரிக்கப்படுகின்றன ?

(ஆ) இத் தொழிற்சாலையிலே எத்தனை பேர்களுக்கு வேலை இடைத்திருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Leather utility and fancy articles like belts, wallets, purses, bill folders, school-boy satchells, ladies' hand-bags, travel bags, writing cases, wrist-watch boxes, zip folio cases, spectacle cases, suit cases, toys, etc.

(*b*) Ten persons are employed on the staff of the Centre and 12 candidates are given training in the Centre.

MR. SPEAKER : Questions are over.

[*Note.*—**An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.**]

## II.—CALLING ATTENTION TO SEA EROSION AND DAMAGES IN TIRUCHENDUR TALUK.

MR. SPEAKER : கனம் எம். எஸ். செல்வராஜன் அவர்கள் சபையின் 40–வது விதிப் பிரகாரம் அமைச்சர் அவர்களின் கவனத்திற்கு ஒரு முக்கியமான விஷயத்தைக் கொண்டுவரவேண்டுமென்று அறிவிப்புக்கொடுத்திருக்கிறார். அதைப் பற்றிச் சுருக்கமாகப் பேசவேண்டுமென்று அவரைக் கேட்டுக்கொள்கிறேன்.

SRI M. S. SELVARAJAN : Sir, under Rule 40, I rise to call attention to a matter of urgent public importance, viz., sea erosion and damages thereby at Manapad in Tiruchendur taluk, Tirunelveli district.

கனம் சபாநாயகர் அவர்களே, மணப்பாடு என்பது திருநெல்வேலி ஜில்லாவில், திருச்செந்தூர் தாலூகாவில், கடலோரப் பகுதியில் ஒரு புராதனமான சிறு நகரம். அங்கே தூத்துக்குடியின் தென் பகுதியில் கலங்கரை விளக்கு அமைந்திருக்கிறது. 1954–ம் ஆண்டிலே, எப்ரல் மாதம் முதன் முதலாக அங்கே கடலரிப்பு ஏற்பட்டது. அதன் காரணமாக, கடலோரமாக இருந்த மூன்று வீடுகள் சேதமடைந்தன. மற்றும் நான்கு வீடுகள் சிதைக்கப்பட்டு குடியிருக்க லாயக்கில்லாததாகி விட்டது. இது அரசாங்கத்தின் கவனத்திற்கு உடனடியாக வந்து அந்த இடத்தில் இரண்டு பகுதிகளாக 500 அடி நீளத்திற்கு சவுக்குக் கம்புகளைக் கொண்டு 3 அடி அகலத்திற்கு இரண்டு வரிசைகளாக தற்காலிகமாக ஒரு அணை நிறுவப்பட்டது. மத்தியில் மண் மூட்டைகள் அடுக்கப்பட்டு, இந்தக் கடலரிப்பைத் தடுக்க யத்தனங்கள் செய்யப்பட்டன. மண் மூட்டைகள் பயன்படாத நிலையில் மேலும் ஆயிரம் அடி நீளத்திற்கு அணையை விஸ்தரித்து கற்கள் போடப்பட்டு தடுக்கப்பட்டது. 1956–ல் இருந்து 1957 மார்ச் வரையில் கடலரிப்பு நீடித்தது. ஓரளவுக்கு அதைத் தடுப்பதற்கு அந்த அணை அப்போது உதவி செய்தது. 1957–ம் ஆண்டில், நவம்பர் மாதத்தில் அதே இடத்தில் மீண்டும் கடலரிப்பு ஏற்பட்டது. அப்போது இருந்த தற்காப்பு அணை ஓரளவுக்கு உபயோகமாயிருந்ததன் காரணமாக எந்த விதமான சேதாரமும் ஏற்படவில்லை. மறுபடியும், 1958–ம் வருஷம் அக்டோபர்-நவம்பர் மாதங்களில் கடலரிப்பு ஏற்பட்டது. அந்த கட்டத்தில்தான் நான் அவசரப் பிரேரணை கொடுத்தேன். அப்போது கடலரிப்பு ஆபத்தும் அணை ஓரளவுக்குச் சேதப்பட்டும் இருந்ததால் அங்கே பயங்கரமான நிகழ்ச்சி ஏதும் நிகழ்ந்து விடுமோ என்று முன்னெச்சரிக்கையாக இருக்கவேண்டுமென்று. இந்த அவசரப் பிரேரணை மூலமாக